# நல்வழி - ஔவையார்

பேரா. முனைவர் த. டான் ஸ்டோனி
தமிழ்த்துறை, இலயோலா கல்லூரி,சென்னை
donstony@loyolacollege.edu
9944911404

# பாடல் - 1

உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்

எண்பது கோடி நினைந்து எண்ணுவன – கண்புதைந்த

மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்

சாந்துணையும் சஞ்சலமே தான்

# பாடல் -1 விளக்கம்

- நாம் உண்ண தேவை நாழி அரிசி சோறு தான்,
- உடுக்க நான்கு முழம்,
- ஆனால் நாம் ஆசைப்படுவது எண்பதுகோடி விஷயங்கள்,
- எனவே, கிடைப்பதை வைத்து "போதும்" என்ற மனநிலையில் வாழாமல்
- மேலும் மேலும் வேண்டும் வேண்டும் என்று வாழும் மனிதரின் வாழ்க்கை
- மண் கலம் போல் எப்போதும் துன்பமே நிலைக்கும்.
- ஆதலால் இருப்பதை வைத்து கொண்டு வாழும் மன அமைதி வேண்டும்.

## பாடல் - 2

மரம்பழுத்தால் வெளவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமங் கில்லை – சுரந்தமுதம்
கற்றா தரல்போல் கரவாது அளிப்பரேல்
உற்றார் உலகத்தவர்

# பாடல் -2 விளக்கம்

- ஒரு மரம் பழுத்தால் அது பறவைகளையோ, மனிதர்களையோ கூவி அழைக்க வேண்டிய அவசியமில்லை,
- அது போல் அமுதசுரபி போல 'அடுத்தவருக்கு இல்லை 'என்று சொல்லாமல் கேட்டதை கொடுக்கும் வள்ளல்களுக்கு அனைவருமே உறவினர்.

## பாடல் - 3

இழுக்குடைய பாட்டிற்(கு) இசைநன்று(;) சாலும்
ஒழுக்கம் உயர்குலத்தின் நன்று – வழுக்குடைய
வீரத்தின் நன்று விடாநோய்(;) பழிக்கஞ்சாத்
தாரத்தின் நன்று தனி

# பாடல் – 3 விளக்கம்

- இலக்கணப் பிழை உடைய பாட்டு எழுதுவதை விட… உரைநடை நல்லது.
- நல்ல குலத்தில் பிறந்து ஒழுக்கம் தவறுவதை விட… உயிரை விடுவது நன்று,
- திறமையில்லாத வீரத்தில் போர் களம் சென்று புறமுதுகிட்டு ஓடி உயிரை விடுவதை விட…. தீராத வியாதியினால் உயிர் போவது நல்லது.
- தவறு செய்தால் பழிநேருமே என்று அஞ்சாமல் தவறு செய்யும் பெண்ணுடன் வாழ்வதை விட …… தனியாக வாழ்வது நல்லது.

# பாடல் - 4

ஆறிடும் மேடும் மடுவும் போலாம் செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர் – சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து

# பாடல் – 4 விளக்கம்

- ஆறு வரும் வழியில் உண்டாக்கும் மேடும் பள்ளம் போல, நம்முடைய செல்வம் ஒருநாள் அதிகமாகும் அல்லது குறையும்.
- பூமியில் வாழும் மனிதர்களே இதை உணர்ந்து
- உங்களிடம் செல்வம் இருக்கும் போதே பசி என்று வந்தவருக்கு அன்னம் இடுங்கள்,
- தாகம் என்று வந்தவருக்கு தண்ணீர் கொடுங்கள்,
- நீங்கள் செய்த தர்மம் உங்களின் தலை காக்கும்,
- அதுவே உங்கள் உயிர் உயரும் உபாயம் ஆகும்.

# பாடல் - 5

வெட்டெனவை மெத்தனவை வெல்லாவாம் வேழத்தில்

பட்டுருவும் கோல்பஞ்சில் பாயாது – நெட்டிருப்புப்

பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்

வேருக்கு நெக்கு விடும்

# பாடல் – 5 விளக்கம்

- பெரிய யானையின் மீது அம்பு பாய்ச்சினால் அது அதைக்கொன்று விடும்,
- அதே அம்பை பஞ்சு மூட்டையில் எறிந்தால், அது மூட்டையை துளைத்து வெளியே சென்று விடும், பஞ்சுக்கு ஒரு சேதாரமும் ஆகாது.
- கடிய கடப்பாரைக்கு வளைந்து கொடுக்காத பெரிய பாறை,
- சிறிய செடியின் வேர் ஊன்றி வெடித்து உடைந்து விடும்.
- அது போல் கண்டிப்பான குணங்களாலும், கடுமையான சொற்களாலும் ஒரு காரியத்தை சாதிக்க முடியாது.
- மென்மையாக இன்சொல்லுடன் பழகினால் நம்மை யாரும் அழிக்க முடியாது, கடுமையான விஷயங்களையும் சுலபமாக சாதிக்கலாம்